[27th September 1958

(ஆ) இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே என்னென்ன தொழில்கள் எந்தெந்த இடங்களிலே ஆரம்பிக்கப்படும் ?

(இ) இத் திட்டங்கள் மூலம் ஏற்பட்ட பலாபலன்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Nil, Sir.

(*b*) & (*c*) A statement [a] showing the particulars of schemes started under the Second Five-Year Plan in Coimbatore district with the financial assistance of the Khadi and Village Industries Commission, the places where they have been started and benefits derived or expected to be derived from these schemes is placed on the table of the House.

SRI P. G. MANICKAM : கைக்குத்தல் அரிசி முறையை ஜனங்களிடத்திலே பரப்புவதற்கு கோபிசெட்டிபாளையம் தாலூகாவிலும் இன்னும் சில இடங்களிலும் நடவடிக்கை எடுக்கப்பட்டிருப்பதாகத்தெரிகிறது. இந்த கைக்குத்தல் அரிசி முறையை, மில்கள் மூலமாக விடமின் சக்தி குறையாமல் உற்பத்தி செய்வதற்குள்ள பரிசீலனையை அரசாங்கம் நடத்துமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கைக்குத்தல் அரிசிப் பிரச்னையிலே சத்துள்ள அரிசியாக இருக்கவேண்டும் என்பது மட்டுமல்ல ; அடியோடு வேலையில்லாமல் திண்டாடுகிறவர்களுக்கு வேலை கொடுப்பதும் கவனிக்கவேண்டியிருக்கிறது. மில்லிலே அரிசியின் சத்து போகாமல் இருப்பதற்கு வழி செய்தால், வேலையில்லாத் திண்டாட்டத்தைப் போக்குவதற்குப் பயன்படாது.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : கைக்குத்தல் அரிசி என்று சொல்லிக்கொண்டு, மிஷினிலே குத்தி, பாலிஷ் இல்லாமல் புழக்கடையில் வைத்து நோம்பி உடனே கொண்டுவந்து கொடுக்கிறார்கள் என்பது அரசாங்கத்திற்குத் தெரியுமா ? இந்தத் தொழிலில் ஈடுபட்டுள்ள எல்லோரும் வேலையை விட்டுவிட்டு இருப்பதும், மேல் பாலிஷ் இல்லாமல் மிஷினில் குத்தி கைக்குத்தல் அரிசி என்று சொல்லிக் கொடுப்பதும் அரசாங்கத்திற்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்பொழுது இண்டஸ்ட்ரீஸ் இலாகா மூலமாக இண்டஸ்ட்ரியல் கோவாபரேடிவ் சொசைடிகள் கைக்குத்தலுக்காக அமைக்கப்பட்டிருக்கின்றன. அவைகள் இண்டஸ்ட்ரீஸ் இலாகாவின் மேற்பார்வையிலேயே நடக்கின்றன. அங்கே பரிசுத்தமாக கைக்குத்தல் அரிசிதான் உற்பத்தி செய்யப்படுகிறது. அந்த அரிசிதான் சர்க்காருடைய தேவைக்கு இப்பொழுது பயன்பட்டுவருகிறது.

*Complaint against sarishtadar*

MR. SPEAKER : The hon. Member Sri T. T. Daniel is not in his place. So his question No. 579 and the answer will be printed in the proceedings.

* 579 *Q*.—SRI T. T. DANIEL : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there are any complaints against the sarishtadar in the District Magistrate's Court in Kanyakumari district ; and

(*b*) if so, what steps the Government have taken against such complaint petitions?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) There were some allegations of misconduct on the part of the sarishtadar of the District Magistrate's Court, Kanyakumari. They have not been substantiated.

---

[a] Printed as Appendix VII on pages 885–886 infra.